உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்.

# மெய்ம்மொழி விளக்கம்.

உலகெலா முணர்ந்தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

அஃகறிவாய பசுபாச வறிவனைத்து நிகழ்தற்குரிய வாயிலாய மன வாக்குகளான் முறையேயுணர் தற்கும், உரைத்தற்குமுரிய குணங் குறிகளின்றி அனுபூதி யறிவொன்றான் அறிதற்குரிய சிவசத்தாயுள்ளவன், குறைந்த கலையையுடைய திங்களையும், நிறைந்த நீரையுடைய கங்கையையுந் தரித்தருளிய திருவேணியுடையவன், ஒருழியன்றி யெங்கும் வியாபகமாதற் கேதுவாய சத்தியுடையவன், திருவம்பலத்துள் நின்றாடியருளுவோன், இவ்வியல்புடைய முதல்வனது செங்கமலமலர் போல விரிந்து விளங்கிய சிலம்பணிந்த திருவடிகளையாம் வாழ்த்தி வணங்குவாம் என்றவாறு,

இது வணங்கி வாழ்த்தி மதிப்பரும்பொருளை வணங்கி வாழ்த்தி மதித்தவாறு.

அநாதிபோத வறிவுருவாய பரம்பொருள், யாதினும் விரவாது தன்னியல்பின் நிற்குங்கால், சிவமெனும் பெயர்த்தென்பது தேற்றி யருளுவார், உலகெலாமுணர்ந் தோதற்கரியவன் எனவும், பின் அநாதி பாசவறிவுருவாய அவையே தானாய பொதுவியல்பின் நிற்குங்கால் தாதான்மிய சத்தியென்னும் பெயர்த்தென்பது தேற்றியருளுவார் அலகில் சோதிய னெனவும், அதன்பின் அவைதா மைந்தொழிலுற்று நிகழுங்கால், அவற்றை நடாத்தற்கண் தலைவனென்னும் பெயர்த்தென்பது தேற்றியருளுவார், நிலவுலாவிய நீர்மலி வேணியன் அம்பலத்தாடுவா னெனவும், அம்முறையாற் பகுத்துவைத் துபதேசித்தருளினார்..

இதனானே மனவாக்குகளா னோதி யுணரப்படாத அதீதநிலைய னாயினும், அவற்றின் மேல் நின்றுண ரமாட்டாவாய் அவற்றைச் சார்ந்து நின்றவுயிர் அவற்றானுந் தெளிந்தறிந்து எளிதின் வழிபட்டுய்தற் குரிய உருவடியுடையனா யருளும் பெருங்கருணை யுடையனாயவம் முதல்வனை யாமுயலு மிந்நூல் முற்று மாற்றான் முற்று மாறுவேண்டுங் கோண்முறை பற்றி வேண்டிக் கோடலென் கடனும், அதனை யவ்வாறு முற்றுமாற்றான் முற்றுமாறு செய்தலவன்கடனு மென்பதூஉம் போந்தவாறு காண்க.

உலகென்பது பலபொருளொரு சொல்லாகலின் ஈண்டு இரட்டுற மொழிந்துகொண் டுரைக்கப்பட்டது. பசுவறிவு, பாசவறிவு இரண் டுந் தம் முளொன் றனை யொன்று இன்றியமையாவென்பது பற்றி இங் ஙனம் அவற்றிற்குப்

பொதுவாய் நின்றதொரு சொல்லான் வைத்தோதியருளினர். அங்ஙன யுடைமையின் உயிர்த்தொழிலே முன் வைத்தருளினரென்பது. உணர்ந் தோதற் கரியவ னென்புழி உணர்ந்து ஓதற்கென்னுஞ் செய்தெ னெச்சமிரண்டும், பயந்து காத்தழிக்கு மென்றாற்போல நின்றன. உணர்த்தற்கு மோதற்குமுரிய கருவிகள் அவாய் நிலையான் வந்தன.

ஈண்டு அருமை இன்மை குறித்துத் தழுவப்படும் பொருண் மேல் நின்றது, எலாமென எழுத்த ஃகு சொல்லான் வைத்தோதியது அவை குறையறிவின் பாலவென்பது சொன்னிலை யானுந்தேற்றற்குப் போலும், பாசவறிவென வொன்றாய் காட்சி, கருதல் உரையென மூன்றாய் நாதமீறாய் பலவேறாய் விரியுமெவையுமடங்க எல்லாமென வைத்தோதப்பட்டது. உயிருணர்வொன்றாயினும் பலவேறாய் நிகழ்தல் பலவேறு வகைப்பட்ட வியஞ்சக வேற்றுமை பற்றியாகலின், அதனையவற்றிற்கா தாமோய வதன்பின்வைத்தோதப்பட்டது. காணப்படாத முதல்வ னுண்மையு முணர்த்துமாறு நோக்கிக் காணப்பட்ட உலக சத்தம் முன்னெடுத்துக் கொள்ளப்பட்டது, அரியவனென்பது உணர்தல் ஓதல் இரண்டனோடுத்தனித்தனி சென்றியையும், குறைமதி நிறைமதியாய் நீண்டதென்பது சொல்லியல் பானுந்தேற்றியருளுவார் உலாவியவென நீட்டல் விகாரம் படவோ தினார். உலவுதல், குறைதல், கலை யென்பது கூறாமேயமையும், உலவிய நிலவெனவியையும், பிறை மதியென்றவாறு. மலி நீரென்பதுமது, அஃதீண்டன்மொழித்தொகை யாய்க் கங்கையை யுணர்த்திநின்றது, அலகிலென்றுங் குறிப்பெச்ச வீறுகெட்டு நின்றது. நிகழ்தல், தரித்தல், அணிதல் மூன்றுஞ்சொல் லெச்சம். மலாடி யென் புழியுவமையுருபு தொக்கு நின்றது. இனி யடிமலரென வுருவகமாக வைத்துரைப்பினு மமையும். அடியென் பதனோடு மலர்சிலம்பிரண்டுத் தனித்தனி சென்றியையும்.

அற்றே லுணர்ந்தோதற் குரிய பொருளா னெமக்கு ஆகக்கடவது ஒன்றின்று போலுமென வழிபாட்டின் மனவெழிச்சிசெல்லாது மடங்குவாரை நோக்கி, அங்ஙன மடங்காது மனவெழுச்சி செல்வித் தற்பொருட்டு அங்ஙனமாயினும் உயிர்படி முறையின் வைத்து எரிதின் வழிபட்டுய்தற்கேற்ற வுருவடிவுடையனாயும் வைகுகின்றன னென்பது தேற்றியருளுதற்கு வேணியனென வடையாளங்காட்டி ப'தனடுக்க வைத்தோதினார். ஓதினாராயினும் பொருண்முறைக்கேற்ப அரியவன் சோதியன் வேணியன் ஆடுவா னென்பதே ஆசிரியர் கருத்தென் றுணரற்பாற்று. முறையே சிறிதும் பெறிதும் புலனாகாமையின் அருவ அருவுருவங்களை யோதாராய் புலனாதற்குரிய உருவொன்றனையே யோதினார் எவருமெளிதினேன்று கோடற்பயனோக்கி. இனி யுருக்கூறவே பொருளான் வேறுபடாத வேனையவும் பெறப்படும்.

உலகின் கட்டலையாய வியல்புடையராயினார் குறைகூறுவார்க்கும் முறைகூறுவார்க்கும் எளிய்செவ்வியராய் வைகிப்பாலித்தற் கடமை யுடையராக வேண்டுமென்பது, தான்வைகிக் காட்டாக்கால் காண்பா பின்மையின் அவ்வாறு வைகிக்காட்டும் பேரிறைவனென்பது தேற் யருளுவார் அங்கனம்

விசேடித்தாரென்பது தபோசத்தியோடியைந்து நின்றுணர்த்தற்கண் ணிகழும் அதிசூக்கும வைந்தொழில் ஒருவன் தான தனுட்கரந்து பிறரொருவன் வேடங்கொண்டு ஆடுமாறு போறலின் ஆடலெனப்பட்டது, இதற்கிதுவே சிறந்தபொருளென்பது அந்தமிலா, வளவில் சோதியாய் ஞானமூர்த்தியாய் ஆடுமெனவும் இறைவனோங்கொளியாய் ஞானமூர்த்தியாய் நிருத்தஞ்செய்யுமெனவும் நூலாசிரியரிருவரும் வழிபடுங்காலி தனையே வழிமொழிந்து கொண்டு வழிபட்டமையானுமறிக,

இனி யுலகெலா முணர்ந்தோதற் கரியவனென்பதனைக் காட்டியுப கரித்தற்கட்படு மியல்புபற்றி யோதியதெனக்கொண்டு உயிர்கள் தாமறிய வேண்டுவன வனைத்தையுந் தன்னானறிந்து நின்றும் அவ்வா றுணர்த்தி யுபகரிக்குந்தன்னை யுணர்தலரியனாய்க்கபந்து நிற்பனென வுரைத்தலுமொன்று, இப்பொருட்கு எல்லாவற்றையு மென்னுஞ்சாரி யையுருபு உம்மைகளும் உணர்ந்துமென்னு மும்மையும் ஓர் தெலென்புழி ரகரமெய்யும் விகாரத்தாற் றொக்கன,

இந்தனத்திலெரிபோலத் தோன்றாது நிற்றல்பற்றி யோர்தற் கரிய னென்றார். எனவே அஃதோ ரவல்ல குபவர்க்கு எளியனாகலான். அவனருளானாக்குமிந் நூல் அருள் நூலாமென்பது.

இங்ஙனமன்றி யுரைப்பன வெல்லாம் போலியென்பது மொழி நிற்குமுறையானும் ஆகமாந்தப் பொருளொருமை போதித்தற்கெழுந்த நூல் முதலியவற்றானு மறிந்து கொள்க பிறவுமன்ன.

வி. குஞ்சிதபாதம் பிள்ளை.
வீரசோழகன்
சிவஞானத்திருத்தளி
ஸ்ரீ சிதம்பரம்

சித்தாந்தம் - 1916 ஹு - பிப்ரவரி மீ